28th April 1960]

SRI D. S. AUTHIMOOLAM : சில பிரைவேட் மானேஜ் மென்ட் பள்ளிக்கூடங்களில் வழக்கமாக இன்கிரிமென்ட் கொடுப்பதில்லை. வெயிட்டேஜ் மாத்திரம் வேறு பள்ளிக் கூடங்களுக்குப் போகும் போது கொடுக்கிறார்கள். அப்படி யில்லாமல் இன்கிரிமென்ட் எல்லா ஆசிரியர்களுக்கும் கிடைக்கத் தக்க வகையில் சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதற்குத் தனிக் கேள்வி போடவேண்டும்.

*Essay competition in Hindi*

* 862 *Q.*—SRI A. VEDARATHNAM கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) மத்திய அரசாங்கத்தின் உதவியுடன் கல்லூரி மாணவரிடையே இந்தியில் கட்டுரைப் போட்டி நடத்த உத்தேசித்திருக்கிறதா ? அப்படியானால், அதன் விபரம் என்ன ?

(ஆ) இந்தி அபிவிருத்திக்காக மத்திய அரசாங்கம் நம் மாநில அரசாங்கத்திற்கு அளித்திருக்கும் உதவி என்ன?

(இ) அவ்வுதவி முழுதும் பயன்படுத்தப்பட்டதா ? மேலும் உதவி தேவையா ? அப்படியானால் எதற்கு ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) No, Sir.

(ஆ) The exact figures of assistance are not readily available. But assistance is given on the basis of expenditure incurred and is necessary, for meeting the expenditure on the following six schemes :—

(i) Teaching grant for Hindi Prachark Vidyalayas at Madras and Tiruchirappalli.

(ii) Stipends for trainees of Pracharak Vidyalayas at Madras and Tiruchirappalli.

(iii) Grant for appointment of 100 part-time teachers.

(iv) Teaching grant for Rashtra Basha Visharad Vidyalaya at Tiruchirappalli.

(v) Stipends for students of the Rashtra Basha Visharad Vidyalaya.

(vi) Grants for shorthand and typewriting classes.

SRI A. VEDARATHNAM : இந்த இந்தி கட்டுரை எழுதுவ தற்காக மத்திய அரசாங்கத்திலிருந்து வருகின்ற இந்த மான்யத்தை நாம் பயன்படுத்திக்கொள்ளாததற்கு என்ன காரணம் ? நமது மாநிலத்தில் இந்தியில் கட்டுரை எழுதுவதற்கு யாரும் முன் வரவில்லையா, அப்படியானால் அத்துறையில் நமது அரசாங்கம் ஏன் கவனம் செலுத்தவில்லை, இனிமேலாவது தக்க கவனம் செலுத்த முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதற்காக மதராஸ் யூனிவர் ஸிட்டியும் ஒரு போட்டி வைத்திருக்கிறார்கள். இந்தியில் கட்டுரை எழுதுவதற்கு இதில் மாணவர்களுக்கு வாய்ப்பு கிடைக்கிறது.

[28th April 1960

SRI A. V. P. ASAITHAMBI: அரசியல் சட்டத்தில் 14 மொழிகள் தேசீய மொழிகளாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கும்போது, ஹிந்திக்கு மாத்திரம் தனிச் சலுகை காட்ட வேண்டிய அவசியம் என்ன? ஹிந்திக்கு மாத்திரம் தனிச் சலுகை காட்டுவதன்மூலம் ஹிந்தியைத்தான் அவர்கள் பிரதான மொழியாக ஆக்குகிறார்கள் என்பதை கனம் நிதி அமைச்சர் அவர்கள் உணருகிறார்களா? 14 மொழிகள் தேசீய மொழிகள் என்று சொல்லிவிட்டு ஒரு மொழியைதான் புகுத்துகிறார்கள் என்பதை அவர் உணருகிறாரா? மீதி 13 மொழிக்கும் இந்தச் சலுகையை அளிக்க அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: நமது ராஜ்யத்தைப் பொறுத்தவரையிலும், தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய 4 மொழிகளை இங்கே பல பேர்கள் பயிலுகிறார்கள். அதற்கு எல்லா விதமான வசதிகளும் செய்யப்படுகின்றன. இந்த மொழிகளுக்கு மேல் அதிகமாக மாணவர்கள் விரும்பிப் படிப்பது ஹிந்தி. ஆகவே ஹிந்திக்கும் வேண்டிய வாய்ப்புகள் கொடுக்கப்படுகின்றன. உருது பயிலுகிறவர்களுக்குக்கூட வாய்ப்புக் கொடுக்கப்படுகிறது. வேறு மொழிகள் படிப்பவர்கள் முன்னுக்கு வந்தால் அவர்களுக்கும் வாய்ப்புகள் கொடுக்கத் தயாராயிருக்கிறோம்

SRI K. VINAYAKAM: Sir, in view of the falling standard in English education, will the Government take steps to conduct essay competitions in English and thus retain the valuable treasure which we have inherited for the past 300 years.

THE HON. SRI C. SUBRAMANIAM: I am glad the hon. Member is so much interested in English. But the supplementary question does not arise out on the main question.

SRI C. NATARAJAN: இந்த ஹிந்தி விஷயமாக நிதி எப்படி ஒதுக்கப்பட்டிருக்கிறது என்ற விவரத்தை கனம் அமைச்சர் ஜாதிவாரியாகச் சொல்லமுடியுமா? எத்தனை மாணவர்கள் இந்த நிதி உதவி பெற்றிருக்கிறார்கள் என்பதை கனம் அமைச்சர் ஜாதி வாரியாகச் சொல்லமுடியுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: இதில் ஜாதிப் பேச்சு வர வேண்டிய அவசியம் இல்லை. யார் யார் கொஞ்சம் புத்திசாலித்தனமாகப் படிக்கிறார்களோ, அவர்களுக்கு உதவி கிடைக்கிறது. எனவே இந்த உதவி கிடைக்காதவர்கள் மீதிப் பேரைக் குற்றம் சொல்வதற்கில்லை. சில பேர் ஹிந்தி படிக்காததற்குக் காரணம் சில அரசியல் கட்சிகள் செய்துவரும் பிரசாரம்தான். இதன் விளைவாகப் பின்னால் தீங்குதான் வரும், கஷ்டம் வரும் என்பதை அவர்கள் தெரிந்துகொள்ள வேண்டும்.

SRI A. GOVINDASAMY: ஹிந்தி படித்தவர்கள்தான் மத்திய அரசாங்கத்தில் மந்திரிகளாக வரவேண்டும் என்ற முறையில், ஹிந்தி படிக்காதவர்கள் அங்கே மந்திரிகளாக வரமுடியாத வகையில் தடை இருக்கிறதா?

28th April 1960]

THE HON. SRI C. SUBRAMANIAM: அந்த மாதிரியான தடை எதுவும் வராது. மந்திரிகள் எப்போதும் தப்பித்துக்கொள்வார்கள் அரசியல் வாதிகளும் தப்பித்துக்கொள்வார்கள். கடைசியில், அரசியல் வாதிகள் செய்யும் பிரசாரத்தைக்கேட்டு பொது மக்கள்தான் கஷ்டப்படுவார்கள்.

SRI A. V. P. ASAITHAMBI: இந்திய அரசியல் சட்டப்படி 14 மொழிகள் தேசிய மொழிகளாக இருக்கும்போது, சில அரசியல் கட்சிகளின் பிரசாரம் காரணமாக ஹிந்தியை சிலர் படிக்காமல் இருந்தால், பின்னால் தீங்கு வரும், அவர்கள் கஷ்டப்படுவார்கள் என்று கனம் அமைச்சர் சொன்னார். அப்படியானால், தீங்கு எந்த ரூபத்தில் வரும் என்று அவர் நினைக்கிறார்? ஹிந்தியே பொது மொழியாக வரும் என்ற அச்சம் அவருக்கு இருக்கிறதா?

THE HON. SRI C. SUBRAMANIAM: அப்படி அச்சம் ஒன்றும் இல்லை. ஹிந்தி பெடரல் மொழியாக வரவேண்டும். நிர்வாக மொழியாக இருக்க வேண்டும் என்பதைப் பற்றி கான்ஸ்டிட்யூஷனிலேயே சொல்லப்பட்டிருக்கிறது. அதைப்பற்றி பயப்பட வேண்டிய அவசியம் இல்லை. ஆங்கிலமும் ஹிந்தியுடன் இன்னும் கொஞ்ச காலம் தொடர்ந்து இருக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறோம். ஹிந்தி தெரிந்தவர்களுக்கு, பெடரல் லெவிலில் நல்ல பங்குகொள்வதற்கு வாய்ப்பு இருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது.

MR. SPEAKER : Questions are over.

[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

## II.—CALLING ATTENTION TO THE SCARCITY OF WATER IN CERTAIN VILLAGES AND HARIJAN COLONIES IN GUDIYATHAM TALUKr

MR. SPEAKER: I have received notice under Rule 41 from the hon. Member, Sri V. K. Kothandaraman that he will call the attention of the Hon. Minister for Revenue to a matter of urgent public importance, viz., scarcity of water in certain villages and 9–30 a.m. Harijan colonies in Gudiyatham taluk and the consequent famine conditions in that Taluk.

SRI V. K. KOTHANDARAMAN: கனம் சபாநாயகர் அவர்களே, நான்கு லட்சம் ஜனத்தொகை கொண்ட குடியாத்தம் தாலுகாவில் விவசாயத்திற்குத் தண்ணீர் இல்லை என்பது ஒரு புறமிருக்க, குடிப்பதற்கே தண்ணீர் இல்லாத கிராமங்கள் சுமார் 100 அங்கே இப்போது இருக்கின்றன. சுமார் 70, 80 அடி ஆழம் வரை கிணறு வெட்டியும் அங்கே தண்ணீர் வருவதில்லை. அங்கே ஒவ்வொரு கிராமமும் குடி தண்ணீரே இல்லாததாக இருக்கிறது என்பது கனம் முதல் அமைச்சருக்கே தெரியும். அதிலும், குறிப்பாக ஹரிஜன காலனிகளில் தண்ணீர் இல்லை. மேலும், இப்போது ஆந்திராவிலிருந்து 30 கிராமங்கள் இங்கே வந்து சேர்ந்திருக்கின்றன. அப்படி வந்து சேர்ந்துள்ள பல கிராமங்களில் குடிதண்ணீர் கிணறு கூட இல்லை. குடி தண்ணீர் மிகவும் அவசியமானது. சாப்பாடு இல்லாவிட்டால் பொறுத்துக்கொள்ள